உ

முருகா

# திருப்புகழமிர்தம்

விரோதி | மாத வெளியீடு | வைகாசி



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

விலை ] [ அணு 3







## அட்டைப், படம்

மூன்றுவது படைவீடாகிய பழநிமலைக்கோயிலின் தோற்றம் இவ்விதழ் அட்டையை அணிசெய்கின்றது. ஓவியம் உதவியவர் அன்பர் திரு. கோ. பா. கோவிந்தசாமி செட்டியார் அவர்கள், போட்டோகிராபர், பாபநாசம், தஞ்சாவூர் ஜில்லா. கைம்மாறு கருதாது ஆர்வமுடன் தந்துதவிய அன்னருக்கு எமது மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

---

# எமது புதிய வெளியீடுகள்

### 1. மணி மொழிகள் அறுபது

ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரி அவர்கள் ஆய்ந்தெழுதியது. நல்ல ஆண்டிக் கடிதத்தில் அச்சடித்தது. வர்ணப்பட மேலட்டையுடன் கூடியது. விலை அணு எட்டு. தபாற்செலவு ஓரணு.

### 2. திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்

பகழிக்கூத்தர் அருளியது. முருகனடியார்கள் பாராயணம் செய்யக் கூடிய பக்திச்சுவை ததும்பும் நூல்.— விலை அணு எட்டு. தபாற்செலவு ஓரணு.

[ஒருதடவை புத்தகமனுப்ப ரிஜிஸ்ட்ரேஷன்செலவு 0-4-0 வேறு. ரிஜிஸ்டர் செய்யாது புத்தகம் அனுப்பப்பட மாட்டாது.]

திருப்புகழமிர்தம் காரியாலயம், சென்னை-2

---

### வரப்பெற்றோம்

அமிர்தவசனி

தெய்வீக மாதப்பத்திரிகை. ஆசிரியர் திரு. சு. முத்துசாமி அவர்கள் 54 பந்தர் தெரு, சென்னை. வருட சந்தா ரூ 1-8-0. தனிப்பிரதி ரூ 0-2-6.

ஞானகுரு சித்திரைமலர்

மாத வெளியீடு. ஆசிரியர் திரு: S. G. ராமலிங்கம் B. A. அவர்கள், 5 கான்பாளையம் 3வது தெரு, மதுரை, வருடச் சந்தா ரூ 2-8-0. தனிப்பிரதி ரூ 0-4-0.

ஊர்நலம்

மாதம் இருமுறை வெளியீடு. ஆசிரியர் திரு. R. S. ஸ்ரீகண்டன் M. A. அவர்கள், 91 மவுண்டுரோடு, தேனும்பேட்டை, சென்னை 18. வருடச்சந்தா ரூ 1-8-0. ஆறுமாதசந்தா அணு 12, தனிப்பிரதி 0-1-0

தான்யக் கொள்முதல்

திரு. ரா. ஸ்ரீகண்டன் M. A. எழுதியது. தான்யக் கொள்முதலில் உள்ள குறைபாடுகளை அநுபவ பூர்வமாக எடுத்துச் சொல்லும் சிறுபுத்தகம், விலை அணு இரண்டு (தபாற்செலவு ஓரணு) கிடைக்குமிடம்: 'ஊர் நலம்' காரியாலயம், 91 மவுண்டுரோடு, சென்னை 18.

உ



ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்

குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்


| மலர் 14 | விரோதி ஆண்டு வைகாசித் திங்கள் மே 1949 | இதழ் 2 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருச்செந்தூர்

பரிமள களபசு கந்தச் சந்தத் — தனமானுர்—
படையம படையென அந்திக் குங்கட் — கடையாலே;
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் — குழலாலே—
மறுகிடு மருளனை இன்புற் றன்புற் — றருள்வாயே;
அரிதிரு மருக கடம்பத் தொங்கற் — றிருமார்பா—
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் — தெறிவேலா;
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் — குருநாதா—
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப் — பெருமாளே.

பதவுரை

அரிதிரு மருக – திருமாலின் திருமருகரே! கடம்பு அதொங்கல்– கடப்பமலரால் அழகுறப் புனைந்த மாலை அணிந்த, திருமார்பா – திருமார்பையுடையவரே! அலை குமுகுமு என வெம்ப - கடலானது குமுகுமு என்று வெதும்புமாறு, கண்டித்து எறி வேலா – (சூரனை) கண்டனம் புரிந்து எறிந்த வேலாயுதரே! திரிபுர தகனரும் – முப்புரத்தையெரித்த முக்கட்பெருமானும், வந்திக்கும் சற்குருநாதா – வணக்கஞ் செய்த மேலான குருமூர்த்தியே! ஜெயஜெய – வெற்றியுண்டாகுக; ஹரஹர – பாவத்தை நீக்குபவரே! செந்தில் கந்த – திருச்செந்தூரில் எழுந்தருளிய கந்தமூர்த்தியே! பெருமாளே – பெருமையின் மிக்கவரே! பரிமள களப சுகந்த – இனிய வாசனையுடன் கூடிய சந்தனத்திஞல் கமழப்பெற்று, சந்த தன மானுர் –

அழகிய தனங்களுடன் கூடிய பெண்கள், படை – படைத்த, யம படை என – இயமனுடைய ஆயுதம்போல், அந்திக்கும் – முடிவு செய்யும், கண் கடையாலே – கடைக்கண் பார்வையாலும், வரி அளி நிரை முரல் – வரிகள் பொருந்திய வண்டுக்கூட்டங்கள் ஒலிக்கும், கொங்கு – வாசனை பொருந்திய, கங்குல் குழலாலே – கரிய கூந்தலினாலும், மறுகிடு மருளனை – சுழற்சியடைந்து மயங்கிய அடியேனை, இன்புற்று அன்பு உற – இன்பத்தையெய்தி அன்புநெறி செல்லுமாறு, அருள்வாயே – அருள்புரிவீர்.

பொழிப்புரை

திருமாலின் திருமருகரே! கடப்பமாலையையணிந்த திருமார்பரே! குமுகுமு என்று கடல் வெதும்புமாறு வேலாயுதத்தைக் (சூரனை) கண்டித்து விடுத்தவரே! முப்புரத்தை எரித்த முக்கட்பெருமானும் வணங்கும் மேலான குருநாதரே! வெற்றியுண்டாகுக. பாவத்தை நீக்குபவரே! திருச்செந்தூரில் வாழும் பெருமிதம் உடையவரே! வாசனைமிக்க சந்தனங் கமழ்கின்ற அழகிய தனங்களையுடைய பெண்களுடைய, இயமனுடைய ஆயுதம்போல் முடிவு செய்யும் கடைக்கண்களாலும், வரிகளையுடைய வண்டுகளின் கூட்டம் ஒலிக்கின்ற நறிய கூந்தலாலும், மயங்கிச் சுழல்கின்ற அடியேனை (அருள் நெறிநின்று) இன்புற்று அன்புறுமாறு திருவருள் புரிவீர்.

விரிவுரை

## பரிமளகளப சுகந்தச் சந்தத் தனமானார்:—

சந்தனம் ஒரு சிறந்த வாசனைப்பொருள். அதனை அணிவதனால் உடலுக்குப் பல நலன்கள் உண்டு. சந்தனத்தை உணவுக்குப்பின் பூசிக்கொள்வதனால் ஜீரணசக்தி மிகுதிப்படும். நம் நாட்டில் எல்லாச் சிறப்பு நாட்களிலும் வீடுகளில் சந்தனந் தந்து தாம்பூலந்தரும் வழக்கம் தொன்று தொட்டு வந்தது.

"களபமணிந்திடு மணிமார்பா"

என்ற திருப்புகழ் அடியையும் நினைவுகூர்க.

தகுதியுடைய பெண்கள் சந்தனக்குழம்பைத் தமது மார்பில் அணிந்து கொள்வர்.

மகளிர் மான்போன்று, மருண்டபார்வையும் அச்சமும் உடையவர்களாதலின் "மானார்" என்றனர்.



## படை யமபடையென அந்திக்குங் கட்கடையாலே:—

படை என்ற சொல்லை தனமானார் படைத்த என்று கூட்டி பொருள் செய்துகொள்ளவும்.

பெண்களுடைய கண்கள் ஆடவரை மிகவும் மயங்கச் செய்து கெடுவிளைக்கும். இங்கே விலைமகளிரைப் பற்றி இது குறிக்கின்றது. கற்புடைய மகளிரையன்று என்று தெளிக.

மாதர் யமனுமவர் தம் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம் – ஓதுமதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லைப் போருரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு. —சிதம்பர சுவாமிகள்.

"குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்"

"விழையுமனி தரையுமுனி வரையு மவருயிர் துணிய
வெட்டிப் பிளந்துளம் பிட்டுப்பறிந்திடும் செங்கண் வேலும்"
—திருப்புகழ்.

## வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே:—

கூந்தலில் பூக்களை முடித்திருப்பதனால் வண்டுகள் தேனைப் பருகும் பொருட்டு, இனிய நாதமுடன் ஒலிக்கும்.

கொங்கு-வாசனை. கங்குல்-இருள். பெண்களின் கூந்தலும் ஆடவரை மயக்கும்.

"கொம்பனையார் காதுமோதிரு கண்களி லாமோதசீதள
குங்கும பாடீரபூஷண நகம்மவுங்
கொங்கையி னீராவிமேல்வளர் செங்கழுநீர் மாலைசூடிய
கொண்டையி லாதார சோபையில் மருளாதே"
—திருப்புகழ்.

## மறுகிடு மருளனை:—

மறுகல் - சுழலல்.

"பிறிதொரு குறையிலை எற்பின் வையகம்
மறுகிடு மென்பதோர் மறுக்கமுண்டரோ" —கம்பர்.

## இன்புற்றன்புற் றருள்வாயே:—

அவாவற்று, பற்றினை விட்டு, பரம்பொருளைப்பற்றி நின்றபோது உண்மையான இன்பம் விளைகின்றது. இன்பத்தை அன்பினாலேயே பெறவேண்டுமாதலின் இன்புற்று அன்புற அருள்வாய் என்றனர்.

அரிதிருமருக:—

அரி - பாவத்தை நீக்குபவர்.

அலை குமுகுமுவென வெம்ப கண்டித்தெறி வேலா:—

சூரபன்மன் கடலின்கண் ஒளித்தபோது, முருகவேள் வேலை வேலைமீது ஏவினர்.

"சூரனுடலற வாரிசுவறிட
வேலைவிடவல பெருமாளே"

திரிபுரதகனரும் வந்திக்குஞ் சற்குருநாதா:—

ஆதிகுருநாதராகக் கல்லாலின் புடையிருந்து, எல்லாமாய் அல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிச் சொல்லாமல் சொல்லிய, சிவபெருமானும் சீடமூர்த்தியாக நின்று வணங்கிக் கேட்க, குமாரக்கடவுள் பிரணவ மந்திரத்தை உபதேசித்தனர்.

"சிவனும் வந்திக்கக் கச்சியில்நிற்கும் பெருமாளே"

கருத்துரை.

அரிமருகரே! வேலாயுதரே! சிவகுருவே! செந்திலாண்டவரே! மாதர்மயக்கில் வீழ்ந்து தவியாது அடியேன் உய்வுபெற்று இன்புற அருள்புரிவீர்.



# திருப்புகழ்
## திருச்செந்தூர்

வரியார் கருங்கண் மடமாதர்-
மகவாசை தொந்த மதுவாகி;
இருபோது நைந்து மெலியாதே-
இருதாளி லன்பு தருவாயே;
பரிபாலனஞ் செய் தருள்வோனே-
பரமே சுரன்ற னருள்பாலா;
அரிகே சவன்றன் மருகோனே-
அலைவா யமர்ந்த பெருமாளே.



பதவுரை

பரிபாலனம் செய்து அருள்வோனே – உலகங்களையெல்லாம் காத்தருள் புரிகின்றவரே! பரம ஈசுரன் தன் புதல்வோனே - மேலான தலைவராகிய சிவபெருமானுடைய திருக்குமாரரே! அரி கேசவன் தன் மருகோனே – பாவத்தை நீக்குபவரும் கேசி என்ற அரக்கனைக் கொன்றவருமாகிய நாராயண மூர்த்தியின் மருகரே! அலைவாய் அமர்ந்த – திருச்செந்தூரில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமாளே – பெருமையின் மிக்கவரே! வரிஆர் கருங்கண் மடமாதர் – வரிகளையுடைய கரிய கண்களும் மடமையும் உடைய பெண்களின்மீதும், மகவு - குழந்தைகளின் மீதும், ஆசை தொந்தம் அது ஆகி - ஆசைவைத்து அவர்களுடன் உறவுடையவனுகி, இருபோதும் நைந்து - இரவும் பகலும் உள்ளம் வருந்தி, மெலியாதே - மெலிந்து போகாவண்ணம், இருதாளின் அன்பு தருவாயே– தேவரீருடைய இரண்டு திருவடிகளின் மீது உண்டாகும் அன்பைத் தந்தருள்வீர்.

பொழிப்புரை

எல்லா உலகங்களையும் காத்தருள்பவரே! பெருந் தலைவராகிய சிவமூர்த்தியின் திருக்குமாரரே! பாவநாசகரும், கேசியைக் கொன்றவருமாகிய திருமால் மருகரே! திருச்செந்தூரில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! வரிகளையுடைய கரிய கண்களும் மடமையும் உடைய மனைவியர் குழந்தைகள் மீது ஆசைவைத்து அவர்களுடன் உறவுகொண்டு இரவும் பகலும் உள்ளம் நலிந்து உடல்மெலிந்து அடியேன் துன்புறு வண்ணம், தேவரீர் திருவடிகளில் வைக்கும் அன்பை அருள்புரிவீர்.

விரிவுரை.

வரியார் கருங்கண் ........... தொந்தமதனுலே:—

மனைவி மக்கள் மீது ஆசைகொண்டு அவர்களுடன் நேசம் வைத்து பாச பந்தமுடன் உழல்வர்.

"உலக பசுபாச தொந்த மதனுலே
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசல சுவாச சஞ்ச லமதாலென்
மதிநிலை கெடாம லுன்ற னருள்தாராய்"

மனைவியினிடத்தும் மக்களிடத்தும் ஆசை வைக்கக் கூடாது. ஆனல் வெறுக்கவும் கூடாது. மனைவியிடம் அன்பும்,

மக்களிடம் கருணையும் இருக்கவேண்டும். ஆசை வேறு, அன்பு வேறு. பயன் கருதி வைக்கும் பற்று ஆசையெனப்படும். கடமை பற்றி வைக்கும் பற்று அன்பு எனப்படும்.

தோன்றி மறையும் உடம்புக்குச் சிறிது காலம் துணையாக நிற்பவர் மனைவி முதலியோர். உயிர்க்கு என்றென்றும் துணையாக நிற்பவர் இறைவர். ஆதலின் அவரைப் பற்றி நின்றோரே உய்வு பெறுவர்.

"மனைமக்கள் சுற்றமெனுமாயா
வலையைக் கடக்க அறியாதே
வினையிற் செருக்கி யடிநாயேன்
விழலுக் கிறைத்து விடலாமோ"

## இருபோது நைந்து மெலியாதே:—

இருபோது – இரவு பகல்; அன்றி இம்மை மறுமை எனினும் அமையும்.

மனைவி மக்களைக் குறித்து எண்ணி எண்ணி உள்ளம் நொந்து, உடல் மெலிவர். அதனால் உயிரினும் இனியனும் உயிர்க்குயிராய் நின்று உறுதுணை புரியும் உத்தமனும் வித்தக வேலவனைக் கருதி உய்வு பெறுவோமாக.

## இருதாளிலன்பு தருவாயே:—

நான் என்ற அகப்பற்று அற்ற இடம் ஒரு திருவடி; எனது என்ற புறப்பற்று அற்ற இடம் ஒரு திருவடி. ஆன்மாக்கள் அத்திருவடிகள் இரண்டினையும் பற்றினால் பற்றுக்கள் தானே விலகும். தூங்கினவன் கைப்பொருள் தானே நழுவுவதுபோல் என்க.

## பரிபாலனஞ் செய்தருள்வோனே:—

உலகங்களையெல்லாம் பரம கருணையால் காக்கும் கடவுள் கந்தவேள்.

"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா"

பரிபாலனம்–அரசாட்சி. தேவச் சொர்க்கச் சக்கிரவர்த்தியாதலின் அகிலாண்டங்களையெல்லாம் ஆறுமுகத்தரசு ஆட்சி புரிகின்றனர்.

## பரமேசுரன்:—

ஈசுரன் – தலைவன்; பரம – பெரிய; மாபெருந்தலைவன்.



திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம்

## முருக நாயனார் புராணம்.

"முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்"

"மண்ணுவதும் சோழ மண்டலமே" என்ற வாக்கின்படி சிறந்த வளமைமிக்க நாடு சோழநாடு. பொன்கொழிக்குங் காவிரி நதி பாய்வதனால் எந்நாளும் நீர்மல்குஞ் சீர்மல்கியது. அத்திருநாட்டில் திருப்பூம்புகலூர் என்ற திருத்தலம் மிகவும் உயர்வுடையது. கங்கையை முடித்த கண்ணுதற் கடவுளும் விரும்பி எழுந்தருளிய தலம். மலர்ச்சோலைகளும் அழகிய வாவிகளும் சூழப்பெற்றது.

புகழ்மிக்க அத் திருப்பதியில் வாழும் சிவனடியார்கள் நிரம்பவும் தங்கள் உள்ளம்போல் தூய்மையுடைய திருவெண்ணீற்றையணிந்திருப்பார்கள். அத் திருநீற்றின் திருந்தொளியால் இரவில் இருள் நீங்கியதாயிற்று. தேனைப் பருகும் கருவண்டுகளும் களங்கமின்றி விளங்கும். இசையில் வல்ல வண்டுகள் இனிய ஒலியுடன் அருகில் அசைவதால், அந் நாதத்தைக் கேட்டு அரும்புகள் பூத்து புதிய தேனைப் பொழிகின்றன. குளிர்ந்த சோலைகளில் நாகணவாய்ப் பறவைகள் வாய் மலர்ந்து தேவாரத் திருப்பதிகங்களாகிய செழுந்தேனைப் பொழிகின்றன. வண்டுகளின் பாடலைக் கேட்டுத் தாமரைகள்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

## அலைவாய்:—

கடல் அலைகள் திருமதிலின் மீது மோதுமாறு திகழ்வதினால் திருச்செந்திலுக்கு அலைவாய் என்று பேருண்டு. திருச்சீரலைவாய் எனப்படும்.

## கருத்துரை.

காக்குங் கடவுளே! அரனார் புதல்வரே! மால் மருகரே! செந்தூர் மேவிய தேவதேவரே! மனைமக்கள் என்ற பாசபந்தத்தினால் சிறியேன் மெலியாமல் உமது சரணாரவிந்தத்தின் மீது இடையறாது வளரும் அன்பைத் தருவீர்.

தேன் துளிக்கின்றன. ஓதுவார்களின் தேவாரப் பாடலைக் கேட்டுத் தொண்டர்களின் முகமலரில் ஆனந்தக்கண்ணீர் துளிக்கின்றது.

இத்தகைய பெருமையும் அருமையும் உடைய திருப்புகலூரில் மறையோர் குலத்தில் அவதாரஞ் செய்தவர் முருகநாயனுர். குறைதவின்றி நிறைந்த அன்பினுல் உள்ளம் உருகி சிவபெருமானை நினைக்குந் திருவுடையவர்; ஞானவரம்பாகி நின்றவர்.

அடைமேல் அலவன் துயிலுணர அலர்செங் கமல வயற்கயற்கண்
மடைமே லுகளுந் திருப்புகலூர் மன்னி வாழுந் தன்மையராய்
விடைமேல் வருவார்க் காளான மெய்ம்மைத் தவத்தால் அவர் கற்றைச்
சடைமேல் அணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார்.

பண்டைத் தவத்தின் பயனுகத் திருப்பள்ளித் தாமம் பறித்து நியதியாக இறைவருக்குச் சாத்தும் பணியை மேற்கொண்டனர். பொழுது புலர ஐந்து நாழிகைக்குமுன் எழுவார். நீராடி திருவெண்ணீறு புனைந்து திருநந்த வனஞ் செல்வார். மலர்கின்ற பருவத்தில் உள்ள மலர்களையெல்லாம் பறித்து, தனித்தனியே கூடைகளில் நிரப்புவார். மந்தாரம், கொன்றை, சண்பகம் முதலிய கோட்டுப் பூக்கள்; நந்தியாவட்டம் அலரி, வெள்ளெருக்கு, கரந்தை, தும்பை முதலிய நிலப் பூக்கள்; மல்லிகை, முல்லை, சம்பங்கி, சாதி, முதலிய கொடிப்பூக்கள்; தாமரை, நீலோற்பலம், செங்கழுநீர் முதலிய நீர்ப்பூக்கள் ஆகிய நான்கு வகையான மலர்களையும் இனிது பறிப்பர்.

இவ்வாறு அன்புடன் நெறிதவறுது எடுத்த திருமலர்களைக் கொண்டுபோய், தூய்மையான தனியிடத்தில் வைத்துக் கொள்வார். கோக்குங் கோவை; சுருக்கிக் கட்டும் இண்டை; இணைத்துக் கட்டும் மாலை; தண்டிற்கட்டும் கண்ணி; பிணைத்துக்கட்டும் பிணையல்; தொடுத்துக் கட்டும் தொடையல் என்று மலர்களை ஆறு வகையாகச் செய்து திருமாலைகளை அமைப்பார். ஆறுகாலங்களிலும், சுமந்துகொண்டு சென்று வர்த்தமானீச்சுரம் என்ற திருக்கோயிலுள் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குச் சாத்துவார்; அர்ச்சனை புரிவார். தேவாரத் திருப்பதிகத்தின் மணியான திரு ஐந்தெழுத்தை, மலர்களை எடுக்கும்பொழுதும், தொடுக்கும்பொழுதும் ஒழியாது உச்சரிப்பார். மாலுமயனுங் காணுத மணிகண்டப் பெருமானை நாடோறும் விதிப்படி பூசித்து நேசித்து வந்தனர். இடையருது பஞ்சாட்சர ஜெபம் புரிந்தனர். திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்புகலூருக்கு எழுந்தருளினுர். முற்பிறப்பிற் புரிந்த தவமும் துணைபுரிய அவரை முருகநாயனுர் வரவேற்று, தமது திருமடத்தில் தங்க வைத்து அடியார் குழாங்களுடன் அமுது செய்வித்து மகிழ்ந்தனர். சண்பைமேவுந் திருஞானசம்பந்தர் இவரை இனிய நண்பராகக் கொண்டனர். இவ்வாறு இடையருது திருமலர்த் தொண்டு புரிந்து, திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமணத்திற்குச் சென்று அங்கு எழுந்த சிவசோதியில் கலந்து சிவானந்தப் பெருவாழ்வைப் பெற்றனர்.



## விளக்கம்.

திருப்புகலூர்:--

மூவர் தேவாரம் பெற்றது. அப்பர்சுவாமிகள் முத்தி பெற்ற திருத்தலம். சுந்தரமூர்த்தி நாயனுருக்கு செங்கல் பொன்னுக்கித் தந்த அருமைத் தலம். அப்பர், சம்பந்தர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர் முதலிய பற்பல திருத்தொண்டர்கள் முருகநாயனுர் திருமடத்தில் தங்கியிருந்தமையால் இத்தலம் மிகவும் புனிதமானது. திருக்கோயிலுள் முருகநாயனுர் வழிபட்ட சிவமூர்த்தி வர்த்தமானீச்சுரர்; தனிக் கோயில்.

திருமலர்த் தொண்டு:--

இறை வழிபாட்டிற்கு இன்றியமையாதது பூவும் நீருமே.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலும் அதுகண் டருள்செய்யாநிற்கும்"

சிறப்புடைப் பொருளை முந்துறக்கிளத்தல், என்ற சூத்திரப்படி பூவை முதலில் ஓதினுர். அதனுல் பூக்கொண்டு வழிபடுதல் சாலச் சிறந்தது.

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்"
"கடிமாமலர் தூவிநின்று கைகாள் கூப்பித் தொழீர்"
— அப்பர்.

சச்சிதானந்த மயமானது மலர்; நிறம்-சத்து, வடிவு-சித்து, மணம்-ஆனந்தம். சத்து சித்து ஆனந்தம் இந்த மூன்றையும் உடையது மலர். பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோல் சிவனுக்குள்ளே சிவமணம் கமழ்வேண்டும் என்ற குறிப்பினுல் மலரை இட்டு இறைவனை ஆன்ருேர் வழிபட்டனர்.

"உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணுராகில்"

"பெரியானே சிறியேனை யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன்" —மணிவாசகர்.

மலர்களை வகை வகையாக எடுத்து எழில்பெற மாலைகளாகத் தொடுத்து எம்பிரானுக்குச் சாத்துவது மிகவும் சிறந்த திருப்பணி.

"பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துபாடேன்" —அப்பர்.

"மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபதமணிந்து பணியேனே"

"உலைவற விருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை யெடுத்தேதொ டாமாலிகாபரணம்
உனதடியினிற் சூடவே நாடுமாதவர்கள்"
—அருணகிரிநாதர்.

சிறந்த போகபாக்கியத்தில் வாழ்பவரைக்கண்டு, "நல்ல பூவெடுத்துப் பூசைசெய்தவர்" என்று உலகங் கூறுகின்றது. ஆதலின் நன்மலர் தொடுத்துப் புனைந்தவர் அழியாத சிவ கதி பெறுவர்.

"துளக்கினன் மலர் தொடுக்கில் தூயவிண்ணேறலாகும்"
—அப்பர்

மலர்த்தொண்டு புரியும் விதி

கதிரவன் உதிக்குமுன் எழுந்து, நீரில் முழுகி, தூய ஆடையுடுத்து, சந்தியாவந்தனஞ்செய்து, திருப்பூங்கூடையை எடுத்துக் கொண்டு திருநந்தனவனஞ் செல்லவேண்டும். இறைவனைச் சிந்தித்துக் கொண்டே மலர்களையும் இலைகளையும் பறித்துக் கூடையில் நிரப்பவேண்டும். பூங்கூடையை நாபிக்குக் கீழே தொங்கவிடாமல் தண்டின் நுனியில் மாட்டி, அல்லது கரத்தால் தூக்கிப் பிடித்துக்கொண்டு, பூமாலை தொடுக்கும் புனிதமான இடத்தில் வைத்து, பஞ்சாக்கரத்தைச் செபித்த வண்ணம் மௌனமாக இருந்து பூமாலை தொடுத்து இறைவனுக்குப் புனைவிக்க வேண்டும்.

திருநந்தனவனத்தில் மனஞ்சிறிது வேறுபட்டதனால் ஆலாலசுந்தரர் மண்ணுலகில் வந்து பிறந்ததை உன்னுக. அநாசாரமுள்ளவன், அசைவன், ஆசௌசமுடையவன், நோயாளன் முதலியோர் கொணர்ந்த பூ பூசைக்கு ஆகாது. எடுத்து வைத்து அலர்ந்தது, பழமையானது, உதிர்ந்தது, காற்றில் அடிபட்டது, ஆடையிலும், கையிலும், எருக்கிலையிலும்



ஆமணக்கு இலையிலும் எடுத்தது, புழுக்கடி, சிலந்திநூல், மயிர், எச்சம் இவற்றுடன் கூடியது, நீராடாமல் எடுத்தது, மயானத்தில் மலர்ந்தது, அசுத்தபூமியில் உண்டாகியது, இரவில் எடுத்தது ஆகிய இந்த பூக்களும் சிவமூர்த்திக்கு ஆகா.

முருகநாயனுர் பெருமை

உத்தமோத்தமமான திருப்பூமாலைத் திருத்தொண்டினை என்றும் குன்றாத அன்புடன் முருகநாயனுர் புரிந்து வந்தனர். அதனுல், சிவஞானப் பாலுண்ட திருஞானசம்பந்தருக்குத் தோழராகிய பெரும் பேறுபெற்றனர்.

"அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என்ற திருக்குறளுக்கு இலக்கியமாயினுர். "யான்மகிழ்ந்து துதியங்கழற் சண்பைநாதற்குத் தோழன், வன்றொண்டனம்பொன், அதிகம் பெறும்புகலூர் முருகன் எனும் அந்தணனே" என்று திருத்தொண்டத் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பிகள் துதிக்கின்றனர். அன்றியும் உமையம்மையார் திருமுலைப்பாலுண்ட திருஞானவாக்கால், பாலருவாயர் இவரைச் சிறப்பித்துப்பாடும் பெரும்பேறும், அவருடைய திருமணத்தில் சிவசோதியில் கலந்து இன்புறும் அரும் பேறும் பெற்றனர்.

தொண்டர் தண்கய மூழ்கித் துணையலும் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன் செய்கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டுபண்செயும் புகலூர் வர்த்த மானீச் சுரத்தாரே.

ஈசன் ஏறமர்கடவுள் இன்னமிர் தெந்தையெம் பெருமான்
பூசுமாசில் வெண்ணீற்றர் பொலிவுடைப் பூம்புகலூரில்
மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதும் செய்முடிமேல்
வாசமா மலருடையார் வர்த்தமானீச் சுரத்தாரே.

——:——

## உருத்திரபசுபதி நாயனுர் புராணம்

"முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்"

காவிரிநாடாகிய சோழநன்னுட்டில், நற்குலமும் நற்குடிப் பிறப்பும் உடைய பெருமக்கள் குழுமிவாழும் விழுமிய சிறப்புடைய தலம் திருத்தலையூர். அத்தலத்தில் மறையவர் வளர்க்கும் சிவவேள்வியின் பயனுக வானம் நன்கு பொழிந்தது. நறு

மலர்ச் சோலைகள் தேன்பொழிந்தன. அந்நகரமக்கள் தரும் மும் நீதியும் சால்பும் உடையராய் வாழ்ந்தனர். தவவொளி யும் சிவ மணமும் ஓங்கின.

அருளுடைமையும் பொருளுடைமையு மிக்க அப்பதியில், ஒப்பில்லாத வேதியர் பலர் வாழ்ந்தனர். அம் மறைக்குலம் புரிந்த மாதவத்தினால் பசுபதி நாயனார் அவதரித்தனர். அவர் இருவர் அறியா ஒருவருக்கு அடிமைத்திறம் பூண்டவர். வேதத்திற்குக் கண்மலர்போன்ற திரு உருத்திர மந்திரத் தினைத் தூயஅன்புடன் ஜெபிக்கும் நியமத்தை மேற்கொண்ட னர்.

இனிய பறவைகளும் வண்டுகளும் இருந்து இன்னொலி செய்யும் தாமரைப் பொய்கையில், கழுத்தளவு தண்ணீரில் நின்று, இருகரங்களையும் சிரத்திடைக்கூப்பி, உருகிய சிந்தை யுடன் உருத்திரமந்திரத்தை செபித்துவருவாராயினர். காலை தொடங்கி உச்சிவரையும், மாலையிலும் மிகுந்த உறுதியுடன் நியதியாகப் பயின்றனர். அதனால் உருத்திர பசுபதி என்ற திருப் பெயரை எய்தினர்.

அருமறைப் பயனாகிய உருத்திரமதனை
வருமுறைப் பெரும்பகலு மெல்லியும் வழுவாமே
திருமலர்ப் பொகுட்டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமையுய்த்திட உமையிட மகிழ்ந்தவர் உவந்தார்.

இவ்வாறு பசுபதிநாயனார் முறையாகச் சிலநாள் ஆரா அன் புடன் செபிக்க, மறை புகழும் இறைவர் திருவுள்ளம் உவந்து, திருவருள் புரிந்தனர். தவநெறிநின்ற உருத்திரபசுபதியார் சிவபுரி சேர்ந்து இன்புற்றனர்.

## விளக்கம்.

ஸ்ரீ ருத்திரம்

வேதம் விழுமியது; வித்-அறிவு. வேதம் அறிவுநூல் எனப்படும். "அறிவுநூல் கல்லாமூடர்" என்பார் அருணகிரி நாதர். அவ்வேதம் நான்கு எனப்படும். அவற்றுள் நான்கா வது அதர்வணம் மற்றைய மூன்றின் திரட்டு. ஆதலின் இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்றுமே சிறந்தவை. அத னால் வேதம் "த்ரயீ" என்று பேசப் பெறுகின்றது.

வேதம் மூன்றனுள் இடையில் உள்ளது யஜுர்வேதம். அது ஏழுகாண்டங்களையுடையது. அதன் இடையில் உள்ள



காண்டத்துள் பதினோரு அநுவாகங்களையுடையது திருவுருத் திரம். இதன் இடையில் பஞ்சாக்கரமும், அதன் இடையில் சிகாரமும் விளங்குகின்றது. வேத இதயம் சிவபஞ்சாக்கர மாகும். வேதத்தின் கண் திருவுருத்திரம். கண்மணி திரு ஐந் தெழுத்து என்ப.

இதனால் தெய்வத்தன்மை பூண்ட சேக்கிழாரடிகள், "அருமறைப்பயனாகிய உருத்திரம்" என்று அருளிச் செய்த னர்.

"இறைவன் எல்லாமாய், எங்குமாய் இருந்து அருள்புரி கின்றனன்" என்ற உண்மையை உணர்த்துவது, உருத்திர மந்திரம் என்க.

ருத்திரன் என்ற சொல்

"துன்பத்தினின்றும் விடுவிப்பவர்"

என்ற பொருளைத் தருகின்றது.

ருதம் த்ராவயதி இதிருத்ர:
யாதேருத்ர சிவாதநூரகோராபாபகாசிநீ; — ஸ்ரீருத்ரம்.

"மங்கலவடிவுடன் பாவமில்லாதவரிடம் பிரகாசிப்பவர்"

"இன்னலங் கடலுட் பட்டோர் யாரையு மெடுக்கும் நீரால்
உன்னரும் பரமமூர்த்தி உருத்திரன் எனும்பேர் பெற்றான்
அன்னவன் தரவந்தோர்க்கும் அடியடைந்தோர்க்கும் அன்னான்
தன்னுரு வெய்தினோர்க்கும் சார்ந்ததால் அவன் தனிப்பேர்"
—கந்தபுராணம்.

இத்தகைய சிறந்த உருத்திர மந்திரத்தைக் குழைந்த உள் ளத்துடன் நீரிடை நின்று, கூப்பிய கையும் குவிந்த மனமும் உடையராய் செபித்தலினால் இவர் சிவபதம் எய்தினர்.

கவிநயம்:-

"நிரை நெடுங்கய நீரிடை நெருப்பெழுந்தனைய
விரை நெகிழ்ந்த செங்கமல மென் பொய்கையின் மேவி"

பொய்கை; மனிதரால் உண்டாகாதது; இயற்கையாகவே உண்டாகிய நீர்நிலை. அப்பொய்கையில் சிவந்த தாமரை மலர்கள் மலர்ந்திருக்கின்றன. அக்காட்சி நீரில் நெருப் பெழுந்தது போல் விளங்குகின்றது; என்று அழகாக இயற் கையை வியந்து ஓதுந்திறம் மிகவும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது.

# கற்பு

## வள்ளியம்மை

கற்புநெறி நின்ற பெண்மணிகள், கணவனுர் அனுமதியின்றி ஒரு கருமத்தையுஞ்செய்யக்கூடாது. ஆபரணங்களை இரவல் தருவதும் பிழை. அதனை விளக்குவது இந்த வரலாறு.

வேலப்பன் மிகவும் சாந்தமானவன். எப்பொழுதுமே உரக்கப் பேசமாட்டான். வீதியில் தலைநிமிர்ந்து நடக்கமாட்டான். அடக்கமும் அமைதியும் உடையவன். டம்பமான வாழ்வை வெறுத்தவன். மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளம். சென்னை மயிலாப்பூரில் திருக்கோயிலுக்கு அருகில் ஒரு சிறு வாடகை வீட்டில் வாழ்ந்துகொண்டிருந்தான். அவன் மனத்தில் போதும் என்ற திருப்தியும், சாந்தியும் இருந்தன.

அவன் மனைவி வள்ளியம்மை நல்ல இனிய குணம் படைத்தவள். கணவன் கருத்தறிந்து ஒழுகுபவள். எப்போதும் மலர்ந்த முகத்துடனும் புன்சிரிப்புடனும் இருப்பாள். பம்பரம்போலே சுழன்று வீட்டுவேலைகளைச் செய்வாள். சோம்பல் என்பது அவளிடம் இல்லை. அவள் முகத்தில் நல்ல ஒரு கவர்ச்சி இருந்தது. இனிமையாகப் பேசுவாள். தனிமையாக இருக்கும்போது ஏதாவது அறிவுதரும் நூல்களைப் படித்துக்கொண்டிருப்பாள். கணவனும் மனைவியும் ஒற்றுமையாக வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்வில் இன்பவூற்று ஊறிக்கொண்டிருந்தது.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

இனி சிவந்த வடிவுடைய நாயனுர் தண்ணீரில் நிற்பதையும் அது குறிக்கின்றது; அவருடைய திருமேனி நெருப்பு போலவும், அவருடைய சிரத்தில் உள்ள சிகை புகைபோலவும் காட்சி தருகின்றன என்ற நயத்தையும் சிந்திக்க.

"ஒருமையுய்த்திட உமையிடம் மகிழ்ந்தவர் உவந்தார்"

இந்த சொற்றொடர் மிகவும் இனிமையும் பெருமையும் உடையது. இந்த ஒருமைதான் அருமையைத்தருவது. இருமையும் தருவது.

"பிரமாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்"
— தேவாரம்.

"ஒருமையுடனினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவுவேண்டும்" —இராமலிங்கர்.



சென்னைவாசம் ஆதலினுல் வரவுக்கு ஏற்ற செலவு இருந்தது. நண்பர்கள் பலர் வரவும் போகவும் இருந்தபடியால் செலவு சிறிது அதிகம். அதனுல் வருவாயில் மிச்சம் பண்ண முடியவில்லை. வள்ளியம்மைக்கு சிறந்த ஆபரணம் ஒன்றுமில்லை. தாய்வீட்டில் போட்ட மூக்குத்திருகாணியும், கையில் மெல்லிய ஒரு தங்கவளையலும், காலில் வெள்ளிக் கொலுசுந் தவிர வேறு நகைகள் இல்லை. அதனுல் அவள் அதிகம் வருந்துவதுமில்லை. ஆனுலும் சென்னையில் ஏனைய பெண்கள் மிகுந்த ஆபரணங்களை அணிந்துகொண்டு உயர்ந்த பட்டாடை உடுத்துக்கொண்டு கோயிலுக்கும், சினிமா, டிராமாக்களுக்கும் போவதைக்கண்டு மனம் அமைதிகுலையும். என்ன இருந்தாலும் பெண்மனந்தானே. "நாம் இதுபோல் ஆடையாபரணங்களை அணிந்து கொள்ளும் காலமும் உண்டோ?" என்று ஏங்குவாள். ஆனுல் கணவனை ஒன்றும் தொந்தரவு செய்ய மாட்டாள்.

ஒருநாள் மதுரையிலிருந்து ஒரு நண்பரும் அவர் மனைவியும் சென்னைக்கு வந்தவர்கள் வேலப்பன் வீட்டில் இரண்டொரு நாள் தங்கினுர்கள். நண்பரது மனைவி வள்ளியம்மையைப் பார்த்து "என்ன அம்மா! கழுத்தில் சங்கிலியைக் காணுமே?" என்று கேட்டாள். வள்ளியம்மை சிறிது தயங்கிய குரலில் "இல்லை" என்று கூறிவிட்டு "தாம்பூலம் போட்டுக்கொள்ளுங்கள்" என்று கருத்தை வேறுபக்கம் திருப்பினுள். நண்பனேடு ஒருபுறம் இருந்து உரையாடிக்கொண்டிருந்த வேலப்பன் அதைக் குறிப்பாக நோக்கினுன். வள்ளியம்மை முகத்தில் சிறிதுமாறுபாடும், மனத்தில் சிறு சஞ்சலமும் ஏற்பட்டதை அறிந்தான்.

"வள்ளியம்மையும் பெண்தானே. மற்றப் பெண்களைப்போலே தானும் அணிகலன்களை அணிந்து கொள்ள விருப்பம் வருவது இயற்கைதானே. பாவம் அவள் வேண்டாம் என்று இருந்தாலும் மற்றைப் பெண்கள் சும்மா இருந்தால்தானே? அவளுக்கு ஒரு சங்கிலி செய்து போடலாம் என்ருல் வசதியில்லை. வருவாயில் மிகுதியாகவில்லை. மனைவிக்கு எப்படியாவது ஒரு சங்கிலி வாங்கித் தரவேண்டும்" என்று கருதினுன்.

மனைவியை நோக்கி "பெண்ணே! உனக்கு ஒருசங்கிலி வாங்கித் தரட்டுமா?" என்ருன். வள்ளியம்மை "என்ன ஊஞ்சல் சங்கிலியா?" என்ருள். வேலப்பன் சிரித்து "பித்துப்பிடித்தவளே! ஊஞ்சல் சங்கிலியன்று, தங்கச் சங்கிலி" என்ருன்.

வள்ளியம்மை இப்போது எதற்குத் தங்கச்சங்கிலி. நான் என்ன உங்களைக் கேட்டேனு? கடன்பட்டு வாங்கவேண்டாம். தாங்கள் சிரமப்படக்கூடாது. வயிற்றுக்கு உணவு அகப்பட்டால் போதாதா?" என்ருள். வேலப்பன் "இல்லை. அடுத்த மாதம் மூன்றுமாத சம்பளம் போனஸ். நானூற்றைம்பது ரூபாய் வரும்.

அத்துடன் சிறிது கடன் வாங்கி பன்னிரண்டு பவுனில் ஒரு சங்கிலி செய்யலாம் என்று எண்ணுகிறேன்'' என்ருன். வள்ளியம்மைக்கு அளவற்ற மகிழ்ச்சி. தனக்கு ஏதோ பெரிய பாக்கியம் வந்து விட்டதாக எண்ணினுள்.

மூன்றுமாதங்களுக்குப்பின் பன்னிரண்டு பவுன் சங்கிலி மிகவும் அழகாகச் செய்து வள்ளியம்மைபால் தந்தான். நானூற்றைம்பது ரூபாய் போனஸ் வந்தவுடன் நானூற்றைம்பது ரூபாய் கடன் வாங்கி ஒருவாறு மனேவியின் மனதை மகிழ்வித்தான். தங்கச் சங்கிலியை அணிந்துகொண்ட வள்ளியம்மை அடிக்கடி கண்ணுடியில் பார்த்து மகிழ்ந்தனள். மனேவியின் மகிழ்ச்சியைக் கண்டு வேலப்பனுக்கு ஒரு திருப்தி. என்னமோ ஒருகடமையைச் செய்ததாகவே எண்ணினுன்.

சிலமாதங்கள் கடந்தன. எதிர்வீட்டில் வாழும் சுப்பம்மாள் அடிக்கடி வந்து வள்ளியம்மையிடம் பேசிக்கொண்டிருப்பாள், சங்கிலியை வாங்கிப்பார்த்து "மிகவும் நேர்த்தியாக இருக்கின்றது; இதை நீ அணிந்திருக்கின்றபோது மிகவும் களேயாக இருக்கின்றது" என்று புகழ்வாள். சுப்பம்மாள் ஒரு நாள் வந்து "அம்மா! சிந்தாதிரிப்பேட்டையில் ஒரு நண்பர் வீட்டில் இன்று கல்யாணம். நானும் என் வீட்டுக்காரரும் போகவேண்டும். உன் சங்கிலியைக் கொடும். மாலே கொணர்ந்து தந்துவிடுவேன்'' என்ருள். வள்ளியம்மை நகையை இரவல் தருவது நன்றன்று என்று சிறிது தயங்கினுள். மீண்டும், தாட்சண்யம். தரமாட்டேன் என்ருல் அவள் ஏதாவது தன்னே ஏசக்கூடும் என்று அஞ்சி சங்கிலியைக் கழற்றிக்கொடுத்து, 'அம்மா! என் கணவருக்குத் தெரியக்கூடாது. நீங்கள் மாலேயே கொணர்ந்து தந்துவிடும்'' என்ருள். "அப்படியே'' என்று கூறி அவள் சென்ருள்.

மாலே சங்கிலி வரவில்லே. வள்ளியம்மைக்கு மனம் சிறிது கலக்கமுற்றது. வேலேக்குச் சென்ற கணவஞர் வந்து சங்கிலி எங்கே என்று கேட்டால் என்ன சொல்லுவது? அந்தோ! நாம் ஏன் தந்தோம். "கணவஞர் அனுமதியின்றி தரமுடியாது'' என்று சொல்லாமற் போனேமே. அவ்வாறு சொல்லுவதில் என்ன தவறு. அவள் என்ன தலேயை வாங்கிவிடுவாளா? கற்புடைய பெண்களுக்கு அது பெருமைதானே'' என்றெல்லாம் எண்ணினுள். அடிககடி எதிர் வீட்டிற்குச் சென்று சுப்பம்மாள் வந்துவிட்டாளா என்று பார்த்தாள். வரவேயில்லே. வழக்கம்போல் மாலே ஏழு மணிக்குக் கணவன் வந்தான். வள்ளியம்மை அஞ்சிய மனத்துடன் காபியைக் கொடுத்தனள். ஆனுல் ஏதோ பல எண்ணங்களால் வேலப்பன் மனேவியின் சங்கிலியைப் பற்றி கவனித்தானில்லே.

இரவு கழிந்தது. மறுநாள் காலே 9 மணிக்கு வேலப்பன் வேலேக்குச் சென்ருன். அதுவரையும் வள்ளியம்மைக்குப் பெரிய



அச்சம். எங்கே கணவன் சங்கிலியைப் பற்றிக் கேட்கின்ருனே என்றே பயந்திருந்தனள். கணவன் சென்றவுடன் ஒரு பெரிய சுமை இறங்கியதுபோல் இருந்தது. சுப்பம்மாள் மாலேக்குள் வருவாள், சங்கிலியைத் தருவாள் என்று தைரியமாக இருந்தாள்.

மாலேயுங் கழிந்தது. வேலப்பன் வந்தான். முந்தியநாளேவிட மனம் மிகவும் நடுங்கியது. "இந்த சங்கிலியே செய்துகொடாமல் இருந்தால் எவ்வளவு நன்ருக இருந்திருக்கும். பெரிய வில்லங்கமாகப் போயிற்றே. நமது கணவஞருக்கு இதுவரை நாம் மாறுபாடாக நடந்ததில்லேயே. கடனும் வாங்கி அன்புடன் நாம் சந்தோஷிக்க வேண்டும் என்று செய்து போட்டாரே. இப்போது அவர் கேட்டால் என்ன சொல்வது'' என்று ஏங்கினுள்.

இரவு உணவு படைக்கின்றபோது அவள் கை நடுங்கியது. வேலப்பன் மனேவியை நோக்கி "ஏன் இப்படி கை நடுங்குகின்றது? எங்கே கழுத்தில் சங்கிலி?'' என்று கேட்டான். வள்ளியம்மை "ஒன்றுமில்லே. வாயுமாதிரி இருக்கின்றது. சங்கிலியைக் கழற்றிப் பெட்டியில் வைத்திருக்கின்றேன்'' என்ருள். வேலப்பன் சரி என்று சாப்பிட்டுவிட்டு நித்திரை செய்யலாஞன். வள்ளியம்மைக்கு நித்திரை வரவில்லே. சங்கிலியைப் பற்றியே நினேவு. "இரவல் கொடுக்காமல் இருந்தால் ஒன்றுமில்லேயே. நமது மதியீனத்தால் வந்த சங்கடந்தானே இது. ஒருநாளும் நாம் கணவஞரிடம் பொய்புகன்றதில்லே. இன்று பொய் சொல்ல நேர்ந்தது.

"பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே''

என்று தாயுமாஞர் கூறிய பாடலே நாம் படித்திருக்கின்ருேமே. ஆகா! எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டோம். நாளேயாவது அவள் வருவாளா? மாலே வருவேன் என்றவள் நாளே வராமலா இருப்பாள்...'' என்று பலப்பல எண்ணிப் படுக்கையில் புரண்டாள்.

மூன்ருவது நாள் காலே வேலப்பன் வேலேக்குப் போனுன். மத்தியானம் எதிர்வீட்டு சுப்பம்மாள் வந்துவிட்டாளா என்று பார்த்தாள். சுப்பம்மாள் வீட்டில் படுத்துத் தூங்குவதைக் கண்டாள். வள்ளியம்மைக்குத் தைரியமும் மகிழ்ச்சியும் வந்தன. உடனே அவள் வீட்டில் சென்று, "என்னம்மா! எப்பொழுது வந்தீர்கள்? நல்ல தூக்கம்போல் இருக்கின்றது. மாலே வருவதாகச் சொல்லி மூன்று நாட்களாகக் காணுேமே. சங்கிலி எங்கே? என் கணவஞர் என்னேக் கேட்டுவிட்டார். பெட்டியில் கழற்றி வைத்திருப்பதாகச் சொன்னேன்'' என்ருள். சுப்பம்மாள், "அம்மா கோவிக்காதே, போன இடத்தில் கொஞ்சம் சுணங்கிவிட்டது. சங்கிலி பெட்டியில் வைத்துப் பூட்டி சாவியை என் கணவஞர் கொண்டுபோயிருக்கிருர். வந்த

வுடன் கொணர்ந்து தருகின்றேன்" என்ருள். வள்ளியம்மை "நல்லது" என்று சொல்லி தன் வீட்டிற்கு வந்தாள்.

மாலை நேரமாகியும் சங்கிலியைச் சுப்பம்மாள் கொணரவில்லை. வேலப்பன் வந்து வழக்கம்போல் கோயிலுக்குப் போக நினைத்தான். அன்று வெள்ளிக்கிழமை. "வள்ளி! வா கோயிலுக்குப் போகலாம். இன்று வெள்ளியும் சஷ்டியும் சேர்ந்திருக்கின்றன" என்ருன். கோயிலுக்குக் கணவனுடன் போவதானுல் சங்கிலியை அணிந்து கொண்டுதானே போகவேணும். அதற்காக வள்ளியம்மை, "எனக்கு என்னமோ மயக்கமாக இருக்கின்றது. நீங்கள் போய் வாருங்கள்" என்று கூறினுள். "சரி" என்று வேலப்பன் கோயிலுக்குப் போனுன். வள்ளியம்மைக்கு மிக்க வருத்தம். கணவனுடன் திருக்கோயிலுக்குப் போகும் நல்ல பாக்கியத்தை இழந்த தனது வினையை நொந்து வருந்தினுள். முன் அடிக்கடி வந்த சுப்பம்மாள் இப்போது எட்டிக்கூடப் பார்ப்பதில்லை. "நமது அக்கரைக்கு நாம் தானே போகவேண்டும்" என்று எண்ணி அவள் வீட்டிற்குச் சென்ருள். சுப்பம்மாள் "வா அம்மா வா. சங்கிலியை பெட்டியில் வைத்துப் பூட்டினுர். அந்த சாவியை எங்கேயோ தொலைத்து விட்டார். உன்னைப் பார்ப்பதற்குக்கூட எனக்கு வெட்கமாயிருக்கின்றது. இவர்கள் (கணவன்) சுத்த மோசம். சாவியைத் தொலைத்துவிட்டு சங்கடப்படுகின்ருர். வேறு சாவியைப் போட்டுத் தான் சங்கிலியை எடுக்கவேண்டும். நீ அதைப்பற்றிக் கவலைப் படாதே. உன்னுடைய சங்கிலி என்னுடைய சங்கிலிதான். நாளை மறுதினம் சாவியைப் போட்டு எடுத்துத் தருகின்றேன்" என்று தேன் ஒழுகப் பேசினுள். வள்ளியம்மை ஒன்றுமே பேசாமல் வீட்டிற்கு வந்தாள்.

பின்னும் இரண்டு மூன்று நாட்கள் கடந்தன. சுப்பம்மாளிடம் வள்ளியம்மை போய், "என்ன அம்மா! இன்னுமா சாவி போடவில்லை? நீங்கள் செய்வது நன்ருக இல்லை. அவருக்கு நான் என்ன பதில் சொல்வேன்" என்ருள். சுப்பம்மாள் "அம்மா! வருந்தாதே. சாவி போட்டு சங்கிலியை எடுத்தேன். அவசரத்தில் பெட்டியில் வைத்துப்பூட்டும்பொழுது எப்படியோ ஒருபக்கம் சங்கிலி அகப்பட்டு சிறிது நசுங்கிவிட்டது. அதைப் பழுதுபார்த்து வருமாறு என் கணவரிடம் கொடுத்து ஆச்சாரியிடம் அனுப்பியிருக்கின்றேன். மாலை கொண்டுவந்து தருவேன்" என்ருள். வள்ளியம்மை நம்பி "சரி" என்று சென்ருள்.

மறுநாள் காலை கணவன் வெளியே சென்றதும், வள்ளியம்மை சுப்பம்மாளிடம்போய் "எங்கேயம்மா! நேற்றுமாலை தருவதாகச் சொன்னீரே. நீங்கள் செய்வது நியாயமாகஇல்லை" என்ருள். சுப்பம்மாள், "அம்மா! கோபிக்காதே. ஆச்சாரியாரிடம் கொடுத்தால்



நம்ம இஷ்டத்திற்கு வருகின்றதா? கணவனுர் வந்ததும் மாலை கட்டாயம் வாங்கி வந்து தரச் செய்கின்றேன். என்னுல் தங்களுக்கு மெத்த மனவருத்தம்" என்று கனிவுடன் கூறினுள்.

அன்று மாலை ஏழு மணி. வேலப்பன் வீட்டிற்கு வந்தான். வள்ளியம்மை சிற்றுண்டி தந்து உபசரித்தாள். "என்ன வள்ளீ! சங்கிலி எதற்காகச் செய்தது? பெட்டியில் தூங்கவா? கடன்பட்டுச் செய்தேனே. கண்ணுக்கு அழகாக உடம்பில் அணிந்து கொள்வதற்குத்தானே. என்ன, தேய்ந்துபோகும் என்று எண்ணுகின்றனையா? அசடு சங்கிலியை எடுத்துக் கழுத்தில்போடு" என்ருன். வள்ளியம்மை என்ன செய்வாள் பாவம். சிந்தனை அலைகள் அவள் மனத்தில் வீசின. "கழுத்தில் என்னமோ ஒரு சிறு பருமாதிரி இருக்கின்றது. அதனுல் எடுத்து அணிந்து கொள்ளவில்லை" என்ருள். வேலப்பன் ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினுன்.

"ஆண்டவனே! ஒரு பொய் தவத்தையும் ஆத்ம சக்தியையும் அழிக்கும். நான் கணவனுரிடம் மூன்று நான்கு பொய்களைக் கூறிவிட்டேன். இவ்வளவும் கணவன் உத்திரவு இல்லாமல் நகையை இரவல் கொடுத்ததனுல் வந்தது. என்ன செய்வேன். பாவி சுப்பம்மாள் மாலை தருகின்றேன் என்று சொல்லி சங்கிலியை வாங்கிக்கொண்டு போனுள். சங்கிலியை விற்றுவிட்டாளா? அல்லது ஏமாற்றப் பார்க்கின்ருளா? ஒன்றுமே விளங்கவில்லையே. அந்தோ! என் கணவனுக்குத் தெரிந்தால் மிகவும் வருந்துவதுடன் என்னை வெறுப்பாரே. என்மீது அளவற்ற அன்பு வைத்துள்ள அவர்மனம் நொந்தால் எனக்கு நல்லகதி வராதே" என்றெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுயினுள்.

அடுத்த நாள் கணவன் வேலைக்குச் சென்றபின் சுப்பம்மாள் வீட்டிற்குச் சென்று சிறிது வேகமாக "என்னம்மா! உங்கள் நியாயம் உங்களுக்கே நன்ருகவிருக்கின்றதா? கொஞ்சங்கூட ஒழுங்கில்லை. உடனே சங்கிலியைக் கொடுத்துவிட்டு மறுவேலை பார்க்கவும்" என்ருள். சுப்பம்மாள், தன் கணவனை நோக்கி "ஏன் இப்படி இடிசுவர் மாதிரி உட்கார்ந்திருக்கின்றீர்? கல்ல இடத்தில் நிஷ்டூரம். எழுந்து போய் சீக்கிரம் ஆச்சாரியினிடம் சங்கிலியைக் கேட்டு வாங்கி வாரும். சுத்த அசடுபோல் இருக்கின்றீரே" என்ருள். அவன் "என்னடீ! என்னைப் பிச்சுத் தின்கிருய். சனியன். இதோ போய் வரேன்" என்று வெளியே சென்ருன். சிறிது நேரம் கழித்து சுப்பம்மாள், வள்ளியிடம் வந்து, "அம்மா! என்ன கலிகாலம். மகாமோசம். இந்தக் காலத்தில் யாரைத்தான் நம்புவது? ஆகா! பழுதுபார்க்கச் சொல்லி ஆசாரி கையிலே தந்த சங்கிலியை பாவி அடகுவைத்துவிட்டானும். நூறு ரூபாய் தந்தால்தான் மீட்கலாம். என்கையில் பணம் இல்லை. சற்று பொறுத்துக்கொள். தலையை அடகுவைத்தாலும்

எங்காவது பணம் சம்பாதித்து மீட்டுத் தந்து விடுவேன். எனக்கே மனம் வருந்துகின்றது. உன்மனம் எப்படி வருந்துமோ?'' என்றாள்.

இடியைக்கேட்ட நாகம்போல் வள்ளியம்மை நடுங்கினாள். அவள் மனம் படபடத்தது. ''என்னம்மா இது அக்கிரமம். இப்படிச் செய்துவிட்டீரே. என் கணவனுருக்குத் தெரிந்தால் பெருந்துன்பமாக முடியுமே. நாளை மறுநாளைக்குள் சங்கிலியைத் திருப்பிக் கொடும். உமக்குக் கோடி புண்ணிய முண்டாகும்'' என்றாள். ''ஆகட்டும்'' என்று அவள் சென்றாள்.

அன்று பகல் மூன்று மணிக்கு வேலப்பன் வீட்டிற்கு வந்து, ''பெண்ணே! உன் தங்கைக்குத் திருமணம் நிச்சயமாகிவிட்டதாம். நம்மை வரச்சொல்லி உன் பிதா எழுதியிருக்கின்றார். நாளை இரவு மெயிலில் புறப்படவேணும். புறப்பாட்டுக்கு வேண்டியதை எல்லாம் ஆயத்தஞ் செய். அதைச் சொல்லுவதற்காகத்தான் வந்தேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

வள்ளியம்மை சிந்திப்பாள். ''நாளை புறப்படும்போது சங்கிலியைப் போட்டுக்கொண்டுதானே போகவேணும். என்ன செய்வேன்? சுப்பம்மாள் சுலபமாகச் சங்கிலியைத் தரமாட்டாள் போலும். நாமாவது நூறு ரூபாயை அடுத்த வீட்டம்மாளிடம் வாங்கி சங்கிலியை மீட்டுவிடுவோம். வேறு வழியில்லை'' என்று கருதினாள். அடுத்தவீட்டம்மாளிடம் சென்று மிகவும் கெஞ்சிக் கேட்டு நூறு ரூபாய் கடனாக வாங்கி சுப்பம்மாளிடம் தந்து உடனே செயினை மீட்டு வருமாறு கூறினாள். சுப்பம்மாள் அதை வாங்கிக்கொண்டு ''இதோ ஐந்து நிமிஷத்தில் வருகின்றேன்'' என்று சென்றாள்.

மீண்டும் வந்து, ''அம்மா! வட்டி ஆறுரூபாய் நாலணா தரவேணுமாம். என் கையில் பணமில்லை. நீங்கள் தாரும். பின்னர் எல்லாம் சேர்த்துத் தந்துவிடுவேன்'' என்றாள். வள்ளியம்மை தன் கையிலிருந்த பணத்தில் ஆறேகால் ரூபாய் தந்தாள். அவ்வளவுதான். பின்னர் சுப்பம்மாளைக் காணவேயில்லை. அன்றிரவு முழுவதும் வள்ளியம்மைக்கு உறக்கமே வரவில்லை.

அடுத்தநாள் கணவன் வேலைக்குப் போனவுடன் சுப்பம்மாளிடம் ஓடி ''எங்கே சங்கிலி?'' என்றாள். அவள், ''அம்மா! என் கெட்டகாலம். எல்லாம் வேதனையாகவே வருகின்றது. நூற்றியாறேகால் ரூபாயை நானே கொண்டுபோனேன்; கடைவீதியில் போகும்போது ஒருவன் பின்புறத்தில் வந்து ஒரு இடியிடித்தான். திரும்பிப்பார்த்தேன். மடியில் இருந்த பையைக் காணோம். பகல் கொள்ளையாக இருக்கிறது. இப்பேர்ப்பட்ட களவு நிறைந்த கலிகாலத்தில் எங்கிருந்து மழை பொழியும்? பிறகு ஆசாரியைத் தேடிப்போனேன். அவன் வீட்டைக் காலி செய்துவிட்டு எங்கேயோ



போய்விட்டானாம். என்னமோ கடவுள் கண்திறந்து பார்க்கட்டும். எனக்கு நல்லகாலம் வராமலா போய்விடும். உன் சங்கிலியையும் பணத்தையும் தந்துவிடுவேன்; நான் ஒருவர் சொத்துக்கு ஆசைப்படமாட்டேன்'' என்றாள்.

வள்ளியம்மை ஒன்றுமே பேசாது தன் வீட்டிற்கு வந்தாள். அவளுக்கு உலகமே இருண்டுவிட்டது. இத்தனையும் சுப்பம்மாளின் வஞ்சனையே என்றும், முதலிலிருந்து சொல்லிவந்த வார்த்தைகள் அத்தனையும் பொய் என்றும், சங்கிலிபோனதோடு அமையாமல் மேற்கொண்டு நூற்றியாறு ரூபாய் நாலணா வட்டியுந் தந்தோமே. நமது மதியீனத்தை என்ன என்று கூறுவது? சண்டாளி நம்மை அடியுடன் கெடுத்துவிட்டாளே. நூறு ரூபாய் கடன் வாங்கினேனே. அவர்கள் வந்துகேட்டால் என்ன சொல்லுவது? இன்று மாலை கணவனுருடன் எப்படிப் புறப்படுவது? என் வாழ்வு இவ்வளவுதான் போலும். கழுத்துச் சங்கிலி, கழுத்துக்குச் சங்கிலியாக முடிந்தது'' என்று பலவாறு எண்ணினாள். வாழ்வு கசந்தது.

அன்று மாலை வேலப்பன் வீட்டிற்கு வந்தான். கதவு உள் தாளிடப்பட்டிருந்தது. நெடுநேரந் தட்டினான். பயனில்லை. அடுத்த வீட்டின் மச்சுவழியாகத் தன் வீட்டு வாசலில் குதித்துப் பார்த்தான். மனைவியின் உடம்பைக் கண்டான். உயிரைக்காணவில்லை. ஒன்று மறியாமல் விழித்தான். ஒருவருக்கும் அறிவியாமல், ஒரு வண்டியில் அவள் உடம்பை ஏற்றி மயானத்தில் அடக்கம் புரிந்தான். பிறகு அவன் எங்கு போனானோ? கடவுளுக்குத்தான் தெரியும்.



உ
முருகா

# குலத்தளவே குணம்

தீயவர்கட்கு எப்போதும் தீய புத்தியே தலை நிமிர்ந்திருக்கும். குலப்புத்தியை ஒருவராலும் மாற்ற முடியாது. மாறவுஞ் செய்யாது. குலத்தளவின் குணத்தை விளக்க அடியிற் கண்ட சிறு வரலாறு துணைபுரியும்.

வானளாவி நின்ற பெரிய மலை. தேன் கலந்து அருவி பாயும்; மான்கலந்து கலையுடன் ஓடும். நாகணவாய்ப்பறவைகள் பாடும். மயில்கள் ஆடும். அந்த மலைச்சாரலில் உயர்ந்த ஒரு ஆலமரம். விழுதுகள் இறங்கிப் படர்ந்திருந்தன. அதன் கீழ் சிறந்த ஒரு முனிவர் தவஞ் செய்துகொண்டிருந்தார்.

ஒரு சமயம் அவருடைய திருவுள்ளம் வெளிமுகப்பட்டது. உலகன்னையின் இயற்கையழகை நோக்கி மகிழ்ந்து அமர்ந்திருந்தார். அங்கு ஒரு சிறிய எலியைப்பிடிப்பதற்கு பூனையொன்று பாய்ந்தது. அந்த எலி அஞ்சி முனிவரிடம் ஓடிவந்தது. அதைக் கண்ட முனிவர் திருவுள்ளம் இரங்கிக் கமண்டலத்தில் உள்ள நீரை எடுத்துப் "பூனையாகுக" என்று தெளித்தார். உடனே அந்த எலி பூனையாகிவிட்டது. தன்னைக் கொல்லவந்த பூனையை எதிர்த்து விரட்டிவிட்டது.

பூனை முனிவர் அருகில் மகிழ்ச்சியுடன் உலாவியது. இரண்டொருநாட்களுக்குப் பின் ஒரு பெரிய நாய் இந்தப் பூனையைப் பிடித்துக் கொல்ல வந்து. பூனை முனிவர் அருகில் வந்து அஞ்சித் தஞ்சம் புகுந்தது. முனிவர் கருணைகொண்டு கமண்டல நீரைத் தெளித்து நாயாகச் செய்தார். பூனை நாயாக மாறியது. இந்த நாய், வந்த நாயை விரட்டியது. பின்னர் நாய் வாலையாட்டிக்கொண்டு முனிவர் அருகில் நின்றது.

சில தினங்களுக்குப்பின் ஒரு புலி நாயைக்கொல்ல ஓடிவந்தது. நாய், தாய் போன்ற முனிவர் பெருமானிடம் வந்து நடுங்கி நின்றது. முனிவர் கமண்டல நீரைத் தெளித்துப் புலியாக்கிவிட்டார். இப் புலி, வந்த புலியை உருத்து ஓட்டியது; புலி முனிராஜர்பால் நயந்து நின்றது.

பின்பு ஒரு நாள் சிறுத்தைப்புலியை ஒரு பெரிய சிங்கம் கொல்ல வந்தது. புலி உள்ளம் நடுங்கி ஒடுங்கி, கள்ளம் அறியாத வள்ளல், முனிவர்பால் அபயம் புகுந்தது. உடனே முனிவர் அதன்மீது மீண்டும் கருணைபுரிந்து கமண்டல நீரைத் தெளித்து சிங்கமாக்கிவிட்டார். சிங்கம் புங்கவரருளால் தன்னைக் கொல்ல வந்த சிங்கத்தின் வலி மங்க, எதிர்த்து விரட்டியது.



இப்போது எலி பூனையாகி, பூனை நாயாகி, நாய் புலியாகி, புலி சிங்கமாகியது. உடம்பு சிங்கமானாலும் அந்த எலிக்கு உரிய புத்திதானே இருக்கும். எலி எப்போதும் பிறருக்கு இடர் விளைவிப்பது. பிறருக்குத் தீங்குபுரியும் ஏழு பிராணிகளில் எலி ஒன்று என்று பர்த்ருஹரி நீதிசதகம் கூறுகின்றது.

எலி இலியகன்று சிங்கமாகியது. ஆனாலும் அதன் புத்தி அசிங்கமாகவே அமைந்திருந்தது. மிருகராஜாவுக்கு ஏற்ற பெருந்தன்மையும் பரந்த வன்மையும் அமையவில்லை. குலப் புத்தி நீங்காதல்லவா?

எலிச் சிங்கம் தனித்திருந்து சிந்திக்கத் தொடங்கியது. "இந்த முனிவனது வன்மையின் தன்மைதான் என்னே? ஆகா! அந்தக் கமண்டலத்தில் உள்ள தண்ணீரில் எவ்வளவு மகிமை அடங்கி இருக்கின்றது! ஒரு சிறு பிராணியாகிய என்னை இத்துணைப் பெரிய சிங்கமாக்கிவிட்டான். இனி எனக்கு ஒரு போதும் பயமில்லை. நான் இப்போது மிருக ராஜா. வனபதி. எல்லா விலங்குகளையுங் கொன்று தின்று வாழும் பெரும்பதம் பெற்றேன். என்னைக் கொல்ல ஒரு விலங்கினாலும் ஆகாது. ஆனால் ஒருவேளை இந்த முனிவனுக்குக் குணங் கெட்டு மீட்டும் என்னை எலியாக்கிவிடுவானேயானால் என் பாடு ஆபத்தாக முடியும்; இவன் எப்போதும் கண்களை மூடித் தபசு பண்ணிக் கொண்டிருக்கின்றான். இந்தக் கமண்டல நீரைக் கவிழ்த்து விட்டு, இவனையும் கொன்றுவிடுவோமானால் பிறகு ஒரு கவலையும் இராது; நான் எப்போதும் சிங்கமாகவே பங்கமின்றி வாழலாம்" என்று எண்ணியது.

முனிவர் நிஷ்டை கூடியிருக்கும்போது சிங்கமாகிய எலி கமண்டல நீரைக் கவிழ்த்துவிட்டு, அவரைக் கொல்லும் பொருட்டுப் பாய்ந்தது. முனிவர் நிஷ்டை கலைந்து அதன் கொடிய செயலைக் கண்டு சிரித்தனர். "எலியே வருக" என்றார். உடனே சிங்கம் எலியாக மாறியது. வலியடங்கி மிக்க வெட்கமும் துக்கமுங் கொண்டு எலி பிடித்தது ஓட்டம். இமயமலைபோல் இருடி அமைதியுடன் சமாதியில் இருந்தார்.

—:—

உ

# திருப்பரங்குன்றம்

கி. வா. ஜகந்நாதன்

முருகவேளுக்குரிய படைவீடுகள் ஆறு. படைவீடு என்பது, அரசன் ஒருவன் தன் பகைவரோடு போர் செய்யும் பொருட்டுப் படைகளுடன் பாளையம் இறங்கியிருக்கும் இடத்துக்குப் பெயர். படை தங்கியிருக்கும் இடம் என்பது அதன் பொருள்.

முருகன் சூரபன்மனோடு போர் புரியச் செல்லுமுன் திருச்செந்தூரில் தங்கி, வீரவாகு தேவரை அங்கிருந்து சூரனிடம் தூதாக அனுப்பி, அப்பால் போருக்குப் புறப்பட்டான். அப்போது திருச்செந்தூர் அப் பெருமானுக்குப் படைவீடாக உதவியது.

எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு கருணைத் திருவிளையாடல் செய்யும்பொழுது ஒவ்வோரிடத்தில் வெளிப்படுகிறான். அந்தத் திருவிளையாட்டோடு சிறப்பான தொடர்பு பூண்டு விளங்குவது அந்தத்தலம். சிவபெருமான் யாண்டும் நிறைந்தவனாயினும், பதஞ்சலி வியாக்கிரபாதர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி ஆனந்தத் தாண்டவம் புரிந்த இடமாதலின் தில்லைக்குச் சிறப்பு உண்டாயிற்று. இப்படியே முருகவேள் திருக்கோயில் கொண்டுள்ள தலங்களும் அமைந்திருக்கின்றன.

## ஆறுபடை வீடுகள்

ஆறு படைவீடுகள் முருகனுக்குரிய தலங்களுள் சிறந்தன என்று சொல்வது அடியார் மரபு. ஆறுமுகம் கொண்ட முருகனோடு தொடர்புடைய பொருள்கள் பலவற்றை ஆறாக நினைப்பதில் இன்பம் கண்டனர் அன்பர்கள். நக்கீரர் தாம் பாடிய திருமுருகாற்றுப்படையில் முருகன் உறையும் இடங்கள் இவை என்று சுட்டும்போது ஆறு இடங்களைக் கூறுகிறார். அவர் அப்படிக் கூறியது முதலே ஆறுபடைவீடுகள் என்ற வரையறை வழக்கில் வந்தது.

"ஆறு திருப்பதிகண் டாறெழுத்தும்
அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி
கொண்டோனே"



என்று குமரகுருபர முனிவர் ஆறுபடை வீடுகளை ஆறு திருப்பதி என்று குறிக்கிறார்.

"சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே"

"ஆறு திருப்பதியில் வளர் பெருமாளே"

என்று அருணகிரிநாதர் திருப்புகழில் ஆறு திருப்பதி என்றே படை வீடுகளைக் குறிக்கின்றார்.

கந்தபுராணத்தில் ஆறுபடைவீடுகளில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு துதியைக் கச்சியப்ப சிவாசாரியார் அமைத்திருக்கிறார்.

* * * *

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறும் ஆறு திருப்படைகளாகும். இந்த ஆறில் ஐந்தாவதாகிய குன்றுதோறாடல் என்பது எல்லா மலைகளையும் குறிக்கும். குறிஞ்சி நிலத்துக்குக் கடவுளாகிய முருகவேள் எல்லா மலைகளிலும் எழுந்தருளியிருக்கிறான். அந்த மலைகள் எல்லாவற்றையும் ஒன்றாக வைத்துக் குன்றுதோறாடல் என்னும் தொகைத் தலமாகக் குறிப்பிடுவது மரபு.

"குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே"

என்று நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் சொல்கிறார்.

* * *

## நக்கீரர் வருணனை

ஆறு படைவீடுகளுள் முதலாவதாகிய திருப்பரங்குன்றம் மதுரைக்கு அருகில் உள்ளது. பரன்குன்றம் என்பது பரங்குன்றம் என்று ஆயிற்று. சிவபெருமான் திருக்கோயிலும் அங்கே உண்டு. தேவாரம் பெற்ற தலம் அது.

திருப்பரங்குன்றத்தில் முருகவேள் தேவயானையைத் திருமணம் செய்துகொண்டருளினர். அக்குன்றம் பாண்டியர்களின் தலைநகராகிய மதுரையை அடுத்து விளங்குவதால் பழங்கால முதற்கொண்டே சிறப்பை உடையதாக இருந்தது. நக்கீரர் அதனைக் குன்று என்றே குறிக்கிறார்.

"மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்

கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந் துறைதலும் உரியன்''

என்பது திருமுருகாற்றுப்படை.

மதுரைக்கு மேற்கே திருப்பரங்குன்றம் இருக்கிறது. மலையின் அடிவாரத்தை அடுத்து வயல்கள் உள்ளன, நிலவளத்தைக் காட்டும் கரிய சேறு நிரம்பிய வயல் அவை. அந்த அகன்ற வயல்களில் நீர் தேங்கிய இடங்களில் தாமரை மலர்கள் மலர்ந்துள்ளன. முள்ளைத் தாளையுடைய தாமரைக் கொடிகள் படர்ந்திருக்கின்றன. தாமரை மலரில் உள்ள தேனுக்கும் பூந்தாதுக்கும் ஆசைப்பட்ட வண்டுகள் பகல் நேரத்தில் அம் மலர்களிலே வந்து ஊதுகின்றன. அப்பால் மாலை வரவே தாமரை மலர்கள் இதழ்க் கதவை அடைத்துவிடுகின்றன, மெத்தென்ற அகவிதழ்களையுடைய அந்த மலருக்குள்ளே சுகமாகத் தூங்கிப் போகின்றன வண்டுகள். விடியற்காலையில் அம்மலர்கள் சற்று நெகிழவே வண்டுகள் துயிலெழுகின்றன. உடனே அருகில் தேன் கமழ்கின்ற நெய்தல் மலரிலே சென்று தாது ஊதி அதில் உள்ள தேனைக் குடிக்கின்றன. பிறகு கதிரவன் உதயமாகின்றான். அப்போது திருப்பரங்குன்றத்தின் சாரலைக் காண மேலே பறந்து செல்கின்றன. அங்குள்ள சுனைகளில் பல மலர்கள் மலர்ந்திருக்கின்றன. அம்மலர்களிலே சென்று தேனை உண்டு ரீங்காரம் செய்கின்றன. இவ்வாறு வண்டுகள் உறையுளும், உணவும் பெற்று இன்பமாக வாழும் இடம் திருப்பரங்குன்றம். வயலும் பொய்கையும் சூழ்ந்த இடத்தில் திருப்பரங்குன்றம் இருப்பதை நக்கீரர் இந்த வருணனையால் தெரியவைக்கிறார்.

* * *

## பரிபாடலில் உள்ள செய்திகள்

மதுரை மா நகரிலிருந்து திருவிழாக் காலங்களில் கூட்டம் கூட்டமாக மக்கள் திருப்பரங்குன்றத்திற்குச் சென்றனர். வழி நெடுகச் சோலைகள் இருந்தன. மலையில் மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன. இவற்றையும் மலைக் காட்சியையும் மதுரை நகரத்தார் அங்கே வந்து செய்யும் செயல்களையும் பரிபாடல் என்ற சங்க நூல் மிக விரிவாகத் தெரிவிக்கிறது.

திருப்பரங்குன்றத்தில் உள்ள பொய்கை நீர் நிறைந்திருந்தது. மழை வளம் சிறந்திருந்தமையால் மலை முழுவதும் அடர்ந்த



மரச் செறிவு இருந்தது. அருவியும் சுனைகளும் இருந்தன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் நாட்டில் எங்கும் காடு மிகுதியாக இருந்தன. மக்கள் பெருகப் பெருகக் காட்டை வெட்டி நாடாக்கினர். அதனால் மழை வளம் வரவரக் குறைந்து போயிற்று.

அக்காலத்தில் திருப்பரங்குன்றத்தில் அருவிகூட இருந்த தென்றே தெரிகிறது. அதில் ஆடவரும் மகளிரும் நீராடினர். புனல் விளையாட்டு அங்கே நடைபெற்றது. மணமாவதற்கு முன் முருகனுடைய திருக்கோயிலைச் சார்ந்த சோலையிலே சந்தித்து அன்பு செய்தனர், சில காதலர். மணம் செய்து கொண்டவர்கள் இங்கே வந்து தங்கி இன்புற்றனர். கன்னிப் பெண்கள் இத்தலத்திற்கு வந்து, தமக்கு நல்ல கணவராக வரவேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். மணமான மகளிர் ஊருக்குச் சென்ற கணவர் போன காரியம் பலித்து விரைவிலே வந்து சேர வேண்டுமென்று வேண்டினர். வேறு சில மகளிர் தங்களுக்குக் குழந்தை பிறக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார்கள். அவர்கள் கோயில் யானைக்குக் கரும்பு முதலியவற்றைக் கொடுத்தார்கள். சோற்றைக் கொடுத்தார்கள். அது உண்டொழிந்த மிச்சத்தைப் பிரசாதமாகப் பெற்று உண்டனர். அதனால் யானையைப் போலப் பலமுடைய பிள்ளை பிறக்கும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருந்தது போலும்.

முருகவேள் திருக்கோயிலுக்கு வருகிறவர்கள் அறம் பொருள், இன்பம், வீடு என்ற நால்வகை ஊதியங்களையும் தனித்தனியே பெற எண்ணி வந்தார்கள். முருகனுடைய சந்நிதியில் பொன்னாலும் வெள்ளியினாலும் செய்த பலவகைப் பொருள்களைக் கொணர்ந்து சமர்ப்பித்தனர். முருகனுடைய கையில் உள்ள ஆயுதங்களையும், மணியையும், அவனுடைய வாகனங்களையும் கொண்டுவந்து கொடுத்தனர்.

திருப்பரங்குன்றத்துப் பொய்கையிலே ஆடவரும் மகளிரும் நீந்தி விளையாடினர். நீர் வீசு கருவியினால் நீரை ஒருவர் மேல் ஒருவர் வீசிக் கொண்டனர். ஊடியும் கோபித்தும் மறைந்தும் பொழுது போக்கினர். உதிர்ந்த மலர்களே படுக்கையாகப் படுத்து உறங்கினர்.

சிலர் குரங்குகளுக்குச் சிற்றுண்டிகளை வீசினர். அவை தாவித் தாவி ஓடும் வேடிக்கையைப் பார்த்தனர்.

பாண்டிய மன்னன் விழாக் காலங்களில் தன்னுடைய பரிவாரங்களோடு அங்கே வந்து தரிசனம் செய்தான். அந்தப் பரிவாரங்கள் தேர் மேலும், யானை மேலும், குதிரை மேலும் வந்தன. திருப்பரங்குன்றத்தில் வழியை விட்டுவிட்டு மரத்தடிகளில் அவ் வாகனங்களை நிறுத்தினர்.

திருப்பரங்குன்றத்தில் ஒரு சித்திரசாலை இருந்தது. எழுத்து நிலை மண்டபம் என்று சித்திரசாலையைச் சொல்வார்கள். நல்ல வண்ணங்களைக் கொண்டு எழுதிய ஓவியங்கள் அங்கே இருந்தன. மலர்கள், பூம்பொய்கை முதலிய அழகிய காட்சிகள் அந்தச் சித்திரங்களில் இருந்தன. துருவ சக்கரமும் அதனைச் சார்ந்த சூரியன் முதலிய கிரகங்களும் ஒரு சித்திரத்தில் அமைந்திருந்தன. இரதியின் அழகிய ஓவியமும் காமனது உருவமும் இருந்தன. இவற்றை அன்றிப் புராண கதைகளை விளக்கும் சித்திரங்களும் இருந்தன. அகலிகையின் கதையை விரிவாகக் காட்டும் ஓவியங்கள் இருந்தன. இவற்றை ஆடவரும் மகளிரும் கண்டு களித்தனர்.

பாடுபவர்கள் போடும் தாளமும் ஆடுபவர்கள் போடும் தாளமும் சேர்ந்து முழங்க, குன்றத்திலிருந்து அவற்றின் எதிரொலி முழங்கியது. சிலர் பிரம வீணையை வாசித்தார்கள்; சிலர் ஐந்து துளைகளை உடைய குழலை ஊதினர்; சிலர் ஏழு துளைகளையுடைய புல்லாங்குழலை வாசித்தனர். சிலர் யாழ் வாசித்தனர். அதற்கேற்றவாறு சிலர் முரசொலித்தனர்.

திருப்பரங்குன்றத்தின் மேலும் முருகவேளின் மேலும் வேல் மயில் என்பவற்றின் மேலும் ஆணையிட்டு, ஆடவர்கள் தாங்கள் தூயவர்களென்று காதலிமாரைத் தேற்றினர்.

இவற்றைப் போன்ற பல செய்திகளைப் பரிபாடலில் உள்ள செய்யுட்கள் தெரிவிக்கின்றன.

* * *

## நல்லந்துவனார் பாட்டு

ஆசிரியர் நல்லந்துவனார் பாட்டு ஒன்று பரிபாடலில் உண்டு. அவர் மதுரைக்காரர். அவர், "பரங்குன்று இமயக் குன்றத்துக்கு ஒப்பாக இருக்கிறது" என்று சொல்கிறார். ஏதனால் என்பதை அவரே விளக்குகிறார்.

திருப்பரங்குன்றத்தில் முருகன் எழுந்தருளியிருப்பதை உணர்ந்த தேவர்களும் அசுரர்களும் தவ முனிவர்களும் அங்கே



கூட்டமாக வந்து வழிபடுகின்றனர். யார் யார் வந்திருக்கிறார்கள்?—துழாய் மாலையையும் அளவற்ற செல்வத்தையும் கருடக் கொடியையும் உடைய திருமால் முதலில் வருகிறான். அவனை அடுத்து இடப வாகனத்தையுடைய சிவபெருமான் எழுந்தருளுகிறான். பிரமதேவனும் அவரைத் தொடர்ந்து வருகிறான். துவாதச ஆதித்தர்களும், தேவ வைத்தியர்களாகிய அசுவினி தேவர் இருவரும், அட்டவசுக்களும், ஏகாதசருத்திரர்களும், திக்குப் பாலர்களும் ஆகிய அமரர்கள் அனைவரும் வருகின்றனர். தேவர்கள் வரங்கேட்டால் நாமும் வரங் கேட்கலாமென்று அசுரர்களும் வருகிறார்கள். வேதத்தை முழக்கும் விழுத்தவமுனிவர் வருகின்றனர். இவ்வளவு பேர்களையும் ஒருங்கே பார்க்கும் இடம் எது? சிவபிரான் வீற்றிருக்கும் இமயமலை ஒன்றிலேதான் பார்க்க முடியும். பரனது மலையாகிய அங்கே பார்ப்பது போலவே இந்தப் பரங்குன்றிலும் காணலாம். ஆகவே இமயக்குன்றத்தை ஒத்தது திருப்பரங்குன்றம்.

இமயச் சாரலில் சரவணப் பூம்பொய்கையில் முருகன் தோன்றினான். அந்தப் பொய்கையைப் போல இங்கும் அருவி நீரால் நிரம்பியிருக்கும் சுனையிருக்கிறது. இமயத்தில் முருகனது யானை முழக்கம் கேட்கும்; இங்கே கேட்கும் மேக முழக்கம் அதைப் போல இருக்கிறது.

மதுரையிலே சில வீடுகளில் கல்யாணம் நடக்கிறது. அதில் மண முரசம் ஒலிக்கிறது. அந்த ஒலி திருப்பரங்குன்றத்தில் சிலையோடுகிறது. மதுரையிலிருந்து திருப்பரங்குன்றத்துக்கு வரும் வழியில் மணல் பரந்திருக்கிறது. விழாக்காலமாகையால் அடியவர் பலர் திருப்பரங்குன்றத்தை நோக்கி வருகின்றனர், வருகின்றவர்கள் வெறுங் கையோடு வரவில்லை. முருகனது பூசைக்கு உரியவற்றையும், காணிக்கைகளையும் ஏந்தி வருகின்றனர். வெவ்வேறு விதமான சந்தனத்தைச் சிலர் கொண்டு வருகின்றனர். காற்று வீசினால் அணையாத நந்தா விளக்குக்கு வேண்டிய பொருள்களைச் சிலர் கொணர்ந்தனர். மணம் பெற்ற மலர்களைச் சிலர் ஏந்தி வந்தனர், முழவத்தைக் கொண்டு வந்தனர் சிலர். மணியும் கயிறும் மயிலும் அங்குசமும் யானையும் பிற காணிக்கைப் பொருள்களும் சிலர் எடுத்து வந்தனர்.

வந்து முருகனை வழிபட்டு வேண்டிக் கொள்கின்றனர். மணமாகாத பெண் ஒருத்தி கட்டழகுக் காளையிடம் காதல் கொண்டாள். அவனைச் சந்திக்க முடியாமல் தவித்தாள். அதே நினைவாக இருந்தமையால் ஒரு நாள் இரவில் ஒரு கனவு கண்டாள்.

வையையில் புதிய வெள்ளம் வந்ததாகவும், அப்போது ஊரா ரெல்லாம் சென்று புனல் விளையாட்டு நிகழ்த்தியதாகவும், அங்கே தன் காதலனைச் சந்தித்ததாகவும், கனவு கண்டாள். அவள் இப்போது திருப்பரங்குன்றத்திற்கு வந்திருக்கின்றாள். முருகனிடத்தில் அவள் பிரார்த்தனை செய்து கொள்கிறாள். "கனவிலே நான் கண்டேனே, அது மெய்யாக வேண்டும். அது நனவிலே நடக்க வேண்டுமானால் முதலில் வையையில் வெள்ளம் வரவேண்டும். ஆகையால், முருகா, வையையில் புதுப்புனல் வரும்படி அருள்புரிவாயாக!" என்று வேண்டிக் கொள்கிறாள்.

வேறு சில மகளிர் மணமாகிச் சில காலமாகியும் குழந்தை யின்றி வருந்தினர். அவர்கள் முருகனை வேண்டிக் கொண்டு, கருவுற்றால் இன்ன இன்ன பொருள்களைக் காணிக்கையாக அளிப்போம் என்று பிரார்த்தனை செய்கிறார்கள்.

ஒரு பெண்மணிக்கு மணம் ஆகிவிட்டது. கணவனோடு வாழ்ந்து வந்தாள். தானே பொருளீட்டி அதைக் கொண்டு தர்மம் செய்யவேண்டும் என்ற கொள்கையை உடைய அவன், வியாபாரத்தால் பொருளீட்டும் பொருட்டு வெளியூர் சென்றிருந்தான். அவனுக்கு வேண்டிய பொருள் கிடைத்தால் அவன் உடனே ஊருக்கு வந்துவிடுவான். அவன் விரைவிலே வந்து சேர வேண்டுமென்ற ஆவலுடனுள்ள அவன் மனைவி முருகனிடம் வேண்டிக் கொள்கிறாள். "என் கணவர் விரைவில் வந்து சேரவேண்டும் என்று நேர் முகமாகக் கேட்கவில்லை. "முருகா, ஊருக்குப் போனவருக்கு வேண்டிய பொருள் விரைவிலே கிடைக்கும்படி நீ அருள்புரிய வேண்டும்" என்று பணிந்து இறைஞ்சுகிறாள்.

போர் செய்யச் சென்ற படைக்குத் தலைவனாக ஒரு வீரன் சென்றிருக்கிறான். அவன் மனைவி திருப்பரங்குன்றத்தில் நடைபெறும் விழாவிற்கு வந்திருக்கிறாள். அவள் முருகனை, "கடவுளே, என் காதலர் யுத்தத்தில் பகைவரை அடுவாராக" என்று வேண்டுகிறாள், அர்ச்சனை செய்கிறாள்.

பிரியாமல் சேர்ந்திருக்கும் கணவரும் மனைவியரும் முருகனைப் பரங்குன்றில் வணங்குகின்றனர்; பிரிந்து வாழுவோர் மீட்டும் கூட வேண்டுமென்று வழிபடுகின்றனர்.

மழை வேறு இடங்களில் பொய்த்துப் போனாலும் இங்கே அருவி நீர் இடையறாமல் இருக்கும். "இந்த இயற்கைச் செல்வம் என்றும் அழியாமல் இருக்கவேண்டும்" என்று நல்லந்துவனார் தாம் பாடிய பாட்டின் இறுதியில் வேண்டுகிறார்.

* * *

## நல்லழிசியார் பாட்டு

நல்லழிசியார் என்ற மற்றொரு சங்கப் புலவர் ஒரு பாடல் பாடியிருக்கிறார்.



மதுரையிலிருந்து மாலைக் காலத்தில் திருப்பரங்குன்றத்திற்கு வருகிறார்கள் பலர். வாத்தியங்களை இசைத்துக் கொண்டு தூபதீபங்களுடன் சந்தனம் முதலியவற்றையும் எடுத்துக் கொண்டு வருகிறார்கள். வேறு சிலர் நல்ல அழகிய ஆடைகளையும் மணியையும் வேலையும் ஏந்தி வருகின்றனர். திருப்பரங்குன்றத்தின் அடிவாரத்துக்கு வந்து முருகவேளைப் பாடுகிறார்கள். ஆலாபனம் செய்து இசையோடும் தாளத்தோடும் பாடுகிறார்கள். அவர்களுக்கு அப்போது உண்டாகும் ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. "தேவலோகத்தில் மிக்க இன்பம் பெறலாம்" என்று யாராவது அவர்களிடம் சொன்னால், வேண்டாம் என்று சொல்லிவிடுவார்களாம். "தேவர்கள் வாழும் சொர்க்க லோக இன்பத்தை விரும்புகிறவர் யார்?" என்று கேட்கிறார் புலவர்.

மாலை மாலை அடியுறை இயைநர்
மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்?

திருப்பரங்குன்றத்தில் நிகழ்வனவற்றைப் புலவர் விரிவாகச் சொல்கிறார்.

ஒரு பக்கம் பாணர்கள் யாழை மீட்டிப் பாடுகிறார்கள்; மற்றொருபுறம் வண்டின் ரீங்காரம் கேட்கிறது. ஒரு பக்கம் புல்லாங்குழலின் இன்னிசை எழுகிறது. வேறொரு புறத்தில் தும்பி யென்னும் உயர்ந்த சாதி வண்டுகள் ஊதுகின்றன. ஒரு சார் முழவு முழங்குகிறது. மற்றொரு சார் அருவியின் இசை ஒலிக்கிறது. ஒரு பக்கம் விறலியர் அசைந்து ஆடுகிறார்கள்; மற்றொரு பக்கம் பூங்கொடி நுடங்குகிறது. தாளம் போட்டு பாடுகிறார் பலர். மயில் ஆடுகிறது. இப்படிச் செயற்கை நிகழ்ச்சிகளும் இயற்கை நிகழ்ச்சிகளும் எதிரெதிர் எழுகின்றன.

வேறு புலவர்களும் திருப்பரங்குன்றத்தைச் சிறப்பித்துப் பாடியிருக்கின்றனர்.

* * *

இதுகாறும் கூறிய செய்தியைக் கொண்டு பார்த்தால், திருப்பரங்குன்றம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்கை வளம் பொருந்தியிருந்ததென்றும், மதுரை வாசிகள் அடிக்கடி கூட்டம் கூட்டமாக வந்து முருகனை வழிபட்டார்களென்றும் கோயிலில் சித்திர மண்டபம் முதலிய பல மண்டபங்கள் இருந்தன, என்றும், முருகனைப் பலவகையில் வழிபட்டுக் காணிக்கை நேர்ந்து பிரார்த்தனை செய்து ஆடிப்பாடி அன்பர்கள் போற்றினர் என்றும் அறியலாம். ஆறுபடைவீடுகளுள் முதலாவதாகிய இத்தலம் இன்றும் தமிழ் மக்களால் வழிபடப் பெற்று வருகிறது. அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப்பாக்கள் பல இத்தலத்துக்கு இருக்கின்றன. தென்பரங்குன்றிற் பெருமாள் அன்றும் தமிழ் மக்களுக்கு அருள் செய்து கொண்டு விளங்கினான். இன்றும் அப்படியே விளங்கி வருகின்றான்.

# கோடம்பாக்கம் சிவன் கோயில்

(பரலி - சு - நெல்லையப்பர்)

சென்னைக்குத் தெற்கே சுமார் மூன்று மைல் தூரத்தில் உள்ள கோடம்பாக்கம் சென்னைநகரத்து மக்களுக்கும் சென்னையைச் சுற்றியுள்ள பலஊர் மக்களுக்கும் ஒரு பெரிய யாத்திரை ஸ்தலமாய் விட்டது. அது வடபழநி என்று பேர்பெற்று விளங்குவதுடன், திருநாட்களில் அங்கு செல்வோரின் கூட்டமும் பெருகிவருகிறது பழநியாண்டவர் கோயிலை அடுத்துப் பாழாய்க் கிடந்த தெப்பக்குளத்தைச் சீர்ப்படுத்துமாறு அன்பர்கள் முன்வந்திருப்பது போற்றுதற்குரியது. பழநியாண்டவர் கோயிலுக்குச் செல்லும் அன்பர்கள் அந்தக்கோயிலை அடுத்திருக்கிற பெருமாள் கோயிலையும் சிறிது கவனிக்க வேண்டும்.

வடபழநிக்குச் செல்லும் அடியார்களில் பெரும்பாலார் அங்கே பழமையான சிவன்கோயில்ஒன்று இருப்பதையே அறியாதவர்களாயிருக்கிறார்கள். பழநியாண்டவர்கோயிலுக்கு எதிர்ப்பக்கத்தில் சுமார் ஒரு பர்லாங்தூரத்தில் அந்தச் சிவன் கோயில் இருக்கிறது. அந்தப்பெரிய கோயிலைச் சுற்றியிருக்கிற பிரகாரத்தில் சுமார் இரண்டாயிரம் மக்கள் கூடியிருக்கலாம். சுவாமியின் பேர் புலியூர்த்தேவர் என்றபொருள்படும்வியாக்ரபுரீசுரர். அம்மன் காந்தநாயகி. அந்தத் திருக்கோயிலில் எப்பொழுதும் இன்பமான அமைதி நிலவியிருக்கிறது.

தொண்டை மண்டலத்து இருபத்துநான்கு கோட்டங்களுள் ஒன்றான புலியூர்க்கோட்டத்தின் தலைநகர் கோடம்பாக்கத்தைச் சேர்ந்த புலியூரேயாகும். அதுபற்றியே சுவாமிக்குப் புலியூர்த்தேவர் என்று பேர் ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சிவன் கோயிலை அடுத்த பெரியதெப்பகுளம் மேடுண்டு சீரழிந்துகிடப்பினும், கோயில் சீரானநிலையிலேயே இருக்கிறது. வடபழநிக்குச் செல்லும் அன்பர்கள் அதற்கு எதிர் திசையில் கூப்பிடு தூரத்தில் உள்ள இந்தச் சிவன் கோயிலையும் கண்டுகளிக்கவேண்டும். இந்தச் சிவன் கோயிலைச் சேர்ந்திருந்த பெருமாள் கோயில் மறைந்துவிட்டதென்று சொல்கிறார்கள்.

இனிக் கோடம்பாக்கம் ஸ்டேஷனிலிருந்து பழநியாண்டவர் கோயிலுக்குச் செல்லும் ரஸ்தாவில் அரைமைல் தூரத்தில் வலதுபுறத்தில் மின்சாரக் கட்டடத்திலிருந்து ஒருபர்லாங் தூரத்தில் பாழடைந்த திருக்குளத்துடன் பாரத்வாஜஈசுரர் கோயில்ஒன்று இருக்கிறது. பசுமையானகழனிக்கு நடுவே சிறிய தோர் சோலைக்குள் அழகாக விளங்குகிற இந்த சிவன்கோயிலையும் அன்பர்கள் கண்டு களிக்க வேண்டும். கோடம்பாக்கத்திற்குச் செல்லும் அன்பர்களில் பெரும்பாலார் பழநியாண்டவர் கோயிலைத் தவிர மற்றக் கோயில்களைப்பற்றி அறியாதவர்களாயிருத்தலால் இதனை எழுதலானேன்.

---

சண்முகனடியார் சங்கம், வேலூர், N. A.

இராயவேலூர் ஸ்ரீ சண்முகனடியார் சங்கத்தில் நாளது வைகாசி மீ 9-உ (22-5-49) ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு திருப்புகழமிர்தம் ஆசிரியர், திருமுருக. கிருபானந்தவாரி அவர்களால் கம்பராமாயணத்தில் 'உழை செய்த பிழை' என்பது குறித்துச் சொற்பொழிவு நிகழும்.

---

# நமது புத்தகசாலை

**பவழேந்திரி**

(கற்பின் பெருமையைக் காட்டும் ஓர் இனிய கதை) விலை ரூ. 0-12-0 தபாற்செலவு 0-5-0

**திருவருட்பா**

(திருமுருக கிருபானந்தவாரி யவர்கள் தொகுத்தது) ரூ. 1-0-0 தபாற்செலவு 0-6-0.

**வழிகாட்டி**

திருமுருகாற்றுப்படை; திரு. கி. வா. ஜகந்நாதையரவர்கள் எழுதிய விரிவான உரையுடன் கூடியது. விலை ரூ 2-8-0. தபாற்செலவு 0-6-0.

**அருணகிரிநாதர் திருவுருவப் படம்**

14"X20" அளவில் பலவர்ணப்படம். விலை ரூ. 1-8-0; தபாற்செலவு 0-14-0.

## திருப்புகழமிர்தம் ஆண்டுப் புத்தகங்கள்

| | | | |
|---|---|---|---|
| விஷு | [ஆறுவது] | ஆண்டுப் புத்தகம் விலை ரூ | 2- 8-0 |
| சுபானு | [எட்டாவது] | ,, | 2- 8-0 |
| தாரண | [ஒன்பதாவது] | ,, | 2- 8-0 |
| விய | [பதினோராவது] | ,, | 2-12-0 |
| சர்வசித்து | [பன்னிரண்டாவது] | ,, | 2-12-0 |
| சர்வதாரி | [பதின்மூன்றுவது] | ,, | 3- 0-0 |

தபாற்செலவு ஆண்டு மலர் 1-க்கு 0-4-0. ரிஜிஸ்ட்ரேஷன் செலவு 0-4-0 சேர்த்து அனுப்பவேண்டும்.

**கழகத் தமிழ்க் கையகராதி:**

தமிழ் பயிலும் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டியது. கையடக்கமான புதிய பதிப்பு. ரப் விலை ரூ 1-8-0; தபாற்செலவு (ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணம் உள்பட) ரூ 0-7-0.

**மகாத்மாஜி உபதேசமலர்**

வேலூர் மு. பெருமாள் அவர்கள் தொகுத்தது. மதம், சமூகம், அரசியல் என்னும் தலைப்புக்களின் கீழ், காந்தியடிகள் அவ்வப்பொழுது தெரிவித்துள்ள கருத்துக்களைத் திரட்டி ஒன்றுசேர்த்தது. விலை ரூ. 1-0-0 தபாற் செலவு 0-5-0.

திருப்புகழமிர்தம் காரியாலயம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

Printed & Published by M. Madhusoodana Sivam at the Thiruppugal Amirtham Press, 144 Swaminaicken Street, Chindaripeta, Madras, Editor: Sri Kirupanandavari.

